**காலமறிதல்:**

- பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
  வேந்தர்க்கு வேண்டும் பொழுது.
- பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
  தீராமை ஆர்க்குங் கயிறு.
- காலம் கருதி இருப்பர் கலங்காது
  ஞாலம் கருது பவர்.
- செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
  காணின் கிழக்காம் தலை.
- கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
  குத்தொக்க சீர்த்த இடத்து.

**இடனறிதல்**

- தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
  இடங்கண்ட பின்அல் லது.
- நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
  நீங்கின் அதனைப் பிற.
- கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
  நாவாயும் ஓடா நிலத்து.
- சிறுபடையான் செல்லிடஞ் சேரின் உறுபடையான்
  ஊக்கம் அழிந்து விடும்.

**தெரிந்து தெளிதல்.**

- குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
  மிகைநாடி மிக்க கொளல்.
- பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
  கருமமே கட்டளைக் கல்

**தெரிந்துவினையாடல்:**

- நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
  தன்மையான் ஆளப் படும்.
- அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
  நன்குடையான் கட்டே தெளிவு.
- செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
  எய்த உணர்ந்து செயல்.
- இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
  அதனை அவன்கண் விடல்.
- வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
  அதற்குரிய னாகச் செயல்.
- வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
  நினைப்பானை நீங்குந் திரு.

**சுற்றந்தழால்.**

- அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
  கோடின்றி நீர்நிறைந் தற்று.
- கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
  சுற்றத்தால் சுற்றப் படும்
- காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
  அன்னநீ ரார்க்கே உள.

**பொச்சாவாமை**

- பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
  நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.
- அச்ச முடையார்க் கரணில்லை ஆங்கில்லை
  பொச்சாப் புடையார்க்கு நன்கு.

**பொச்சாவாமை:**

- இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
  வாயின் அதுவொப்பது இல்
- இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம்
  மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

**செங்கோன்மை**

- வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
  கோனோக்கி வாழுங் குடி
- குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
  அடிதழீஇ நிற்கும் உலகு
- வேலன்று வென்றி தருவது மன்னவன்
  கோலதூஉங் கோடா தெனின்.
- இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
  முறைகாக்கும் முட்டாச் செயின்.

**கொடுங்கோன்மை:**

- கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்
  டல்லவை செய்தொழுகும் வேந்து.
- அல்லற்பட் டாற்றாது அழுதகண் ணீரன்றே
  செல்வத்தைத் தேய்க்கும் படை.
- முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
  ஒல்லாது வானம் பெயல்.

**வெருவந்த செய்யாமை:**

- வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
  ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.
- கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
  நீடின்றி ஆங்கே கெடும்.
- கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
  அடுமுரண் தேய்க்கும் அரம்.
- செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
  வெருவந்து வெய்து கெடும்.

**கண்ணோட்டம்:**

- கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
  புண்ணென் றுணரப் படும்.
- பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம்
  கண்ணோட்டம் இல்லாத கண்.
- மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
  டியைந்துகண் ணோடா தவர்.

**ஒற்றாடல்:**

- எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
  வல்லறிதல் வேந்தன் தொழில்.
- துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்
  தென்செயினும் சோர்வில தொற்று.

**ஊக்கமுடைமை:**

- உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதில்லார்
  உடைய துடையரோ மற்று.
- உள்ள முடைமை உடைமை பொருளுடைமை
  நில்லாது நீங்கி விடும்.
- வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
  உள்ளத் தனையது உயர்வு.